பு. சிவபாத முதலியார்.

உ
முருகன்றுணை.

# திருத்தணிகை இரட்டைச்சொல்
# யமகமாலை.

மூலமும் - உரையும்.

இஃது
ம-ள-ள-ஸ்ரீ,
புரசை - அஷ்டாவதானம்
சபாபதிமுதலியாரவர்களால்
இயற்றலுற்று
ஷை யார் மாணாக்கரும்
"கிரிஸ்டியன்காலேஜ்" தமிழ்த்தலைமைப்பண்டிதருமாகிய
திரு - சின்னசாமிபிள்ளையவர்களால்
கையேட்டுப்பிரதிக்கிணங்க
பரிசோதிக்கப்பட்டு
ம-ள-ள-ஸ்ரீ,
பு-தா. குப்புசாமிமுதலியாரவர்கள்
வேண்டுகோளின்படி
திருவையாறு
ஸ்ரீநிவாசபண்டிதரவர்களால்

சென்னை:
ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ்ஸில்
பதிப்பிக்கப்பட்டது.

1895.

முருகன் றுணை.

## நேரிசை ஆசிரியப்பா.

சீதநாண்மலர்ச் செழுந்தவிசுவந்த, வேதனாரணனாதி விண்ணவரொடு, மாதவரனைவருமஞ்சமாட்டித், தாதவிழ்மலர்கொடு சந்ததமருச்சனை, யின்புறப்புரிந் தேத்திவழிபடூஉம், மன்பெருந்தணிகை மால்வரையமர்ந்த, கந்தன்கடம்பன் காங்கெயன்செவ்வேள், எந்தைபூங்குழ லிருவர்மணாளன், பொன்னடிபோற்றுப் புலையனேற்கும், இன்னருள்புரி தந்தினிதுபுரக்குங், கருணைவாரிதி கான்மலர்க்கழற்கே, பெருகித்ததும்பிப் பிறங்குமெய்யன்பி, னிரட்டைச்சொல் யமகமாலையியற்றி, விருப்பொடுசார்த்தினன் மேதகுமான்றே, ருளத்தரசென்று மூவந்துவீற்றிருக்கும், அளப்பரும்புலமை யான்றவெங்கோமான், என்னைப்பொருளாக் கொண்டுளமிரங்கி, தன்னடித்தாமரைத் தண்மலரெளியேன், தன்னுளத்திருத்துந் தகைசால்குணநிதி, பொன்னுசேய்க்கும் புரசைநகரிறை, தட்டாதெவர்க்குந் தண்ணருள்புரியும், அட்டாவதானச் சபாபதியமலன், விழுத்தகுமதனை விழைவுடனெழுதா, வெழுத்தினிலமைத்தினி தீந்தனனெவர்க்கும் வேதியரோதும்வியன்மறைநாளுந், சீதறக்கேட்டுச் செவ்வாய்க்கிள்ளைகள், சிருறவிசைக்குஞ் செழும்பொழிற்றடங்க, ளேருறச்சுலாமெழிற் றிருவையாற், றருமறையவர்குலத் தரும்பெறல்மணியாப், பொருவறவுதித்தரன் பொங்கெழிலுமையாள், வரநதிப்பிரதாபங்கள் மாண்கலைதேர், நாவலர்புகழ்ச்சிருங் கீசநாடகமா, ஆவலொடியற்றியவையாவையமால், புரிதவத்துதித்த புத்திரன்சான்றோர், புறையறத்துதிக்கும் புனிதன்றிராப், பிணியிருணீங்கப் பிறங்குந், திணிகதிர்ச்சீநிவாசச்செம்மலே.



உ

முருகன்றுணே.

# திருத்தணிகை இரட்டைச்சொல்

# யமகமாலை.

## மூலமும் - உரையும்.



### காப்பு.

மாதங்கமாதங்கமஞ்சாலருளினர்மாநிலம்விம்
மாதங்கமாதங்கம்வைத்தார்மதலைவனசமலர்
மாதங்கமாதங்கமலைத்தணிகைவரன்முன்னன்பர்
மாதங்கமாதங்கமாமுகன்காத்தருள்வானெமக்கே.

(இ-ள்.) மாது-பெண், அங்கம்-எலும்பு, ஆ-ஆக, தம் - தம்முடைய, கமஞ்சால்-நிறைவமைந்த, அருளினர் - கிருபையையுடையவர், மா-பெரிய, நிலம்-பூமியானது, விம்மாது - வருந்தாமல், அம்-சலத்தை, கம்-சிரசிலும், மாது- பெண்ணை, அங்கம்-தேகத்திலும்-வைத்தார்-வைத்தபரமசிவனுருடைய, மதலை-பிள்ளை, வனசமலர்-தாமரையில்,மா-திருமகள்,தங்கு-தங்குகின்ற,அம்-அழகையும்,மா-மிருகங்கள், தங்கு-தங்குகின்ற, அமலை-சப்தத்தையுமுடைய, தணிகை-தணிகையில்வாழ்கின்ற, வரன்-சிரேட்டரான சுப்பிரமணியருக்கு, முன்-மூத்தவர், அன்பர் - அடியார்களுக்கு, மா - பெருமை பொருந்திய, தங்கம் - தங்கத்தையொத்தவர், மாதங்கமாமுகன் - யானைமுகத்தை யுடையவர், காத்தருள்வான் - கிருபைசெய்வார், எமக்கு-அடியேங்கட்கு. ஏகாரம்-ஈற்றசை. எ-று. (க)

## நூல்.

கஞ்சங்கஞ்சந்திகழ்கந்தரமென்னடைகாமுறுபொற்
கஞ்சங்கஞ்சந்தனம்வாண்முகமான்விழிக்காரிகைய
கஞ்சங்கஞ்சந்ததநேர்மலர்க்காமனெய்தானென்றலங்
கஞ்சங்கஞ்சந்தம்தகுதணிகேசனைக்கண்டுரையே.

(இ-ள்.) கம்-சலத்திலிராநின்ற, சங்கு - சங்கைப்போலவும், அம்சம்-அன்னத்தைப்போலவும், திகழ்-விளங்காநின்ற, கந்தரம் - கழுத்தையும், மெல்-மிருதுவாகிய, நடை-நடையையும், காமுறும்-இச்சிக்காநின்ற, பொற்கஞ்சம் - பொற்குளத்தைப்போலவும், கஞ்சம் - தாமரையைப்போலவும், தனம் - தனத்தையும், வாள் - ஒளி பொருந்திய, முகம்-முகத்தையும், மான்-மானைப்போல், விழி-விழியையுமுடைய, காரிகையகம்-பெண்ணிடத்தில், சங்கம்-சங்கமென்னும் எண்ணை, சந்ததம்-எப்போதும், நேர்-நிகர்த்த, மலர் - புஷ்பபாணத்தை, காமன் - மன்மதன், எய்தானென்று - போட்டானென்று, அல்-இருளானது, அங்கு-அவ்விடத்தில், அஞ்சு-அஞ்சுகின்ற அங்கம்-தேகமானது, சந்தம்-அழகிய, தகு-தகுதியுடைய, தணிகேசனை-திருத்தணிகைநாதராகிய சுப்பிரமண்யனை, கண்டு-சந்தித்து, உரை-சொல்வாயாக. ஏ-ஈற்றசை. இது மகடூஉமுன்னிலை. எ-று. (உ)

கந்தங்கந்தங்காதடுகளிறேய்தனக்காரிகைசு
கந்தங்கந்தங்குலவுந்தணிகேசன்கனதடத்த
கந்தங்கந்தங்களிதீரத்துதியன்பர்கண்மணியு
கந்தங்கந்தங்கவின்றேளணிகேளெனைக்காப்பதற்கே.

(இ-ள்.) கந்து-கட்டுத்தறியை, அங்கம்-தனது உறுப்பானது, தங்காது-தங்காமல், அடு-முறிக்கின்ற, களிறு-யானையை, ஏய்-நிகர்த்த, தனம்-தனத்தையுடைய, காரிகை-பெண்ணே, சுகம் - சுகமானது, தங்கு-தங்கிய, அந்தம் - அழகானது, குலவும் - பொருந்திய, தணிகேசன்-தணிகைநாதனுடைய, கனம்-பெருமைபொருந்திய,

தடத்தகம் - தடாகத்தினிடத்தில் பொருந்தியிராநின்ற, தங்கம் - தங்கத்தை யொத்தவர், தம்-தம்முடைய, கலி - துன்பமானது,தீர-தீரும்படி, துதி - துதிக்காநின்ற, அன்பர்-அடியார்களுடைய, கண்மணி-கண்மணி, உகந்து - விரும்பி,அம் - அழகுபொருந்திய, கந்தம் வாசனையானது, கவின்-கவின்ற, தோள்-தோளிலணிந்த, அணி-மாலையை, கேள்-கேட்பாயாக, எனை-என்னை, காப்பதற்கு-காக்கிறதற்கு. ஏகாரம்-ஈற்றசை. எ-று. (ரு)

கம்பங்கம்பந்தொடுங்காவணஞ்சூழ்தணிகாசலன்சூர்க்
கம்பங்கம்பங்குஞ்செயுமயிலான்கயிலைக்கிறையா
கம்பங்கம்பங்கயக்கண்ணிசுதன்றனைக்காமன்வந்திங்
கம்பங்கம்பங்கிடநேராவகைவரக்கண்டுரையே.

(இ-ள்.) கம்பம்-கம்பமானது, கம் - ஆகாயத்தையும், பம்-நட்சத்திரத்தையும், தொடும் - அளாவிய, காவணம்-பந்தல்கள், சூழ்-சூழ்ந்த, தணிகாசலன்-தணிகைமலையில் வாழாநின்றவனை, சூர்-சூரபத்மனுடைய, கம்-சிரசை, பங்கம் பங்குஞ்செய்யும் - பங்கம் பங்கமாகச்செய்கின்ற, அயிலான்-வேலையுடையவனை,கயிலைக்கு-கைலாசகிரிக்கு, இறை-கடவுளாகிய பரமசிவனுடைய, ஆகம்-தேகத்தில், பங்கு-பங்காயிராநின்ற, அம்-அழகிய, பங்கயக்கண்ணி-பார்வதியாருடைய, சுதன்தனை-பிள்ளையாகிய முருகக்கடவுளை, காமன்-மன்மதன், வந்து-வந்து, இங்கு-இவ்விடத்தில், அம்பு - அம்பினாலே, அங்கம்-தேகத்தை, பங்கிட - முடமாக்க, நேராவகை - எதிர்க்காவகை, வர-எழுந்தருளிவர, கண்டு-பார்த்து, உரை-சொல். எ-று. (சு)

கண்டங்கண்டம்புவிபோற்றுந்தணிகைக்கடவுள்பைம்பாற், கண்டங்கண்டம்பயின்ஞானத்திருப்பெயர்க்காங்கெயன்கார்க், கண்டங்கண்டங்கலையாமுச்சுடரினர்காதலனைக், கண்டங்கண்டங்கிளரின்னிசையாற்புகல்கந்தரமே

(இ-ள்.) கண்-இடமானது, * தங்கு-தங்கிய, அண்டம்-அண்டமும் புவி-பூமியும், போற்றும்-துதிக்கின்ற, தணிகைக்கடவுள்-தணிகாசலக்கடவுளை, பைம்-பசுமைதங்கிய, பாற்கண்டம்-பாற்கட்டியும், கண்டம் - சர்க்கரைக்கட்டியும்போல, பயில்-பயிலுகின்ற, ஞானம்-ஞானமாகிய, திருப்பெயர்-திருப்பெயரையுடைய, காங்கெயன்-சுப்பிரமண்ணியரை, கார்-கருமைநிறம்பொருந்திய, கண்டம்-கழுத்தையும், கண்-கண்ணனது, தம்-தம்முடைய, கலையாம்-கலையாகிய, முச்சுடரினர்-சோமசூரியாக்கினி யென்கிற முச்சுடர்களையுமுடைய பரமசிவனுடைய, காதலனை-பிள்ளையை, கண்டு-பார்த்து, அங்கு-அவ்விடத்தில், அண்டு-பொருந்திய, அம்-அழகானது, கிளர்-மிகுந்த, இன்-இனிய, இசையால்-கீர்த்தியால், புகல்-சொல்லு, கந்தரமே - மேகமே. எ-று. (௬)

கந்தரங்கந்தரம்போல்வான்களிதணிகேசரநே
கந்தரங்கந்தரங்கானுழலாதன்பர்கட்குறுசோ
கந்தரங்கந்தரங்கச்செய்தருள்குவளைப்புனைசு
கந்தரங்கந்தரந்திப்பிறைவந்துமென்கண்டிலரோ.

(இ-ள்.) கந்தரம்-கழுத்தானது, கந்தரம்போல்வான் - மேகம்போன்ற பரமசிவன், களி-மகிழும், தணிகேசர்-திருத்தணிகை நாதர், அநேகந்தரம் - அநேகந்தரம், கந்தரம் - குகையிலும், கான் - காட்டிலும், உழலாது - உழலாமல், அன்பர்கட்கு - அடியார்களுக்கு, உறு-பொருந்திய, சோகம்-சோகமாகிய, தரங்கம்-சமுத்திரமானது, தரங்கச்செய்து-கெடச்செய்து, அருள்-கிருபைசெய்கின்ற, குவளை-செங்கழுநீர் மாலையை, புனை-அணிகின்ற, சுகந்தர் - பரிமளத்தையுடையவர், அம்-அழகுபொருந்திய, கந்தர்-முருகர், அந்தி-மாலையில், பிறை-சந்திரன், வந்தும்-உதயமாய் வந்தும், என் - என்ன, கண்டிலர்-காணவில்லை. ஏகாரம்-ஈற்றசை. எ-று. (௭)

---

* தங்குதல் - நீங்காமல். 

கண்டனங்கண்ட னந்துங்கோட்டலைக் கொக்கைக்க
ண்டவன, கண்டனங்கண்ட னம்போல்வான் றணிகையிற்
காவிமலை, கண்டனங்கண்டனஞ் சொன்னடைவாண்முகக்
காரிகையைக், கண்டனங்கண்டன மில்லைநெஞ்சந்தனைக்
காவலனே.

(இ-ள்.) கண்டல்-தாழையானது, நந்தும் - விருத்தியாகின்ற, கோட்டு-கரையையுடைய, அலை-சமுத்திரத்தில், கொக்கை-மாமரவுருவமாகிய சூரபத்மனை, கண்டனங் கண்டவன்-தெண்டனை செய்தவர், அகண்டன் - கண்டிதப்படாதவர், நங்கண் - நம்மிடத்தில், தனம்போல்வான்- கருவூலம்போன்றவ ருறைகின்ற, தணிகையில் - தணிகைமலையில், காவி- நீலோற்பலமலரையும், மலை- மலையையும், கண்டு-கற்கண்டையும், அனம்-அன்னத்தையும்போன்ற, கண்-கண்ணையும், தனம் - கொங்கையையும், சொல் - சொல்லையும், நடை - நடையையும், வாள்- ஒளிபொருந்திய, முகம்-முகத்தையுமுடைய, காரிகையை- தையலை, கண்டனம்- பார்த்தோம், கண்டனமில்லை - காணவில்லை, நெஞ்சந்தனை-மனதை, காவலனே-நாயகனே. எ-று.

சங்கஞ்சங்கஞ்செறிகாரவுணப்படை சாய்ந்துவன்னெஞ்
சங்கஞ்சங்கங்கதிர்போலுங்மணிகையன்தாழ்செவிக்க
சங்கஞ்சங்கங்கொண்டவள்ளல்சுதன்வரைத் தாழ்குழனி
சங்கஞ்சங்கன்றப்பெயர்நடையாற்புவிதத்துறுமே.

(இ-ள்.) சங்கஞ்சங்கம் - சங்கஞ் சங்கமென்னும் அளவுள்ள செறி - நெருங்கிய, கார் - கருமைநிறம் பொருந்திய, அவுணப்படை-இராக்ஷசசேனையானது,சாய்ந்து-மடிந்து,வல்-வலிய,நெஞ்சு-மனதானது, அங்கு-அவ்விடத்தில், அஞ்சு-அஞ்சுகின்ற,அங்கம்-தேகமானது, கதிர்போலும், சூரியனையொத்த - தணிகையன், திருத்தணிகைநாதர் - தாழ்தொங்குகின்ற, செவிக்கு-காதினிடத்தில்,அசங்கு-அசங்குகின்ற, அம்-அழகிய, சங்கம்- சங்கக்குண்டலத்தையும் கொண்ட-அணிந்த, வள்ளல்-பரமசிவனுடைய,சுதன்-பிள்ளையாகிய

சுப்பிரமண்ணிய ருறைகின்ற,வரை-மலையிலிராநின்ற, தாழ்-நீண்ட, குழல்-கூந்தலையுடையமாது, நிசம்-நிசமே,கஞ்சம்-தாமரையானது, கன்ற-கன்றும்படி, பெயர் - நடக்கின்ற, நடையால்-நடையினுல், புவி-பூமியானது, தத்துறும்-துன்பத்தை யடையும். ஏகாரம் - ஈற்றசை. எ-று. செவிக்குஎன்பது வேற்றுமை மயக்கம் (அ)

சந்தனஞ்சந்தனங்கேதனன்போற்றுந்தணிகையன்பாற்
சந்தனஞ்சந்தனங்கற்குக்கொடாவகைசசார்ந்ததுகச்
சந்தனஞ்சந்தனங்காணும்வளையுந்தரிக்கும்வில்வ
சந்தனஞ்சந்தனங்கண்டவர்போலத்தருக்குவமே.

(இ-ள்.) சந்தன் - அழகுடையவன், அம்சம் - அன்னத்தை, தன்-தன்னுடைய, அம்-அழகிய, கேதனன்-கொடிச்சீலையிலுடைய பிரமன்,போற்றும்-துதிக்கின்ற,தணிகையன்பால்-தணிகைமலையில் வாழ்கின்ற முருகக்கடவுளிடத்தில், சந்து - தூதுசென்ற, அனம்-அன்னமானது, அனங்கற்கு-மதனுக்கு, சந்து கொடாவகை - சந்து கொடுக்காமல்,சார்ந்தது-வந்தது,கச்சு-வாரணிந்த, அம்-அழகுபொருந்திய, தனம் - கொங்கையும், சந்தனம்-சந்தனத்தை, காணும்-காணும், வளையும் - கைவளையலும், தரிக்கும்-கழலாதிருக்கும், வில்-கரும்புவில்லை யுடைய, வசந்தன் - மன்மதனை, அஞ்சம் - அஞ்சமாட்டோம், தனம்-திரவியத்தை, கண்டவர்போல்-பார்த்தவர்போல் தருக்குவம் - தருக்கடைவோம். ஏ-ஈற்றசை. எ-று.

இங்கே தருக்கென்பது களிப்பின் கிளர்ச்சி. (கூ)

பங்கயம்பங்கயம்வாண்முகம்பன்முலையாள்சுதன்சம்
பங்கயம்பங்கயமார்வயல்சூழ்தணிகைப்பத்தர்சோ
பங்கயம்பங்கயந்தீர்த்தருள்வேலனன்றிப்பலியின்
பங்கயம்பங்கயமொட்டாந்தனப்பசலைத்தெறுமே.

(இ-ள்.) பங்கயம்-தாமரையும், பம் - நட்சத்திரமும், கயம்-யானையும்போன்ற, வாள்-ஒளிபொருந்திய, முகம்-முகத்தையும், பல்-

பல்லையும், முலையாள்-முலையையும் உடைய பார்வதியினுடைய, சுதன் - பிள்ளை, கம்பு-சங்குகளையுடைய, அம்-அழகிய, கயம்-தடாகங்களும், பங்கு - பங்காயிராநின்ற, அயம்- சலமானது, ஆர்- பொருந்திய, வயல்-வயல்களும், சூழ்-சூழ்ந்த, தணிகை - தணிகையிலிராநின்ற, பத்தர் - அடியார்களுடைய, சோபம்-சோபத்தையும், கயம்-க்ஷயத்தையும், பங்கு-முடத்தையும், (அயம்) ஐயம் - சந்தேகத்தையும், தீர்த்து-நீக்கி, அருள்-கிருபைசெய்கின்ற, வேலன்-வேலையுடையவன், அன்றி-அல்லாமல், பலியின்பங்கு-பலியின்பங்காகிய, அயம்-ஆடானது, பங்கயமொட்டு-கர்ணிகைக்கு, ஆம்-ஒப்பாகிய, தனம்-கொங்கையிலேபடர்ந்த, பசலை-பசலையை, தெறுமே-நீக்குமா?

தரங்கந்தரங்கமஞ் சூற்கொண்டுலாவுந்தணிகையினு
தரங்கந்தரங்கம் பதங்கனனையர் தமர்கண்மலந்
தரங்கந்தரங்கம் பதிந்தவர்நாட்டிற் றளரிடையந்
தரங்கந்தரங்கம்பு கொங்கைவரை யொருதையலுக்கே.

(இ-ள்,) தரம்-கூட்டமாகிய, கந்தரம் - மேகமானது, கமம்-நிறைந்த, சூற்கொண்டு-கருப்பங்கொண்டு, உலாவும் - உலாவுகின்ற, தணிகையில்-தணிகையிலிராநின்ற, நாதர்-நாதர், அம்-அழகுபொருந்திய, கந்தர்-கந்தரென்னுந் திருநாமத்தை யுடையவர், அங்கம்-தேகமானது, பதங்கன்-சூரியனை, அனையர்- நிகர்த்தவர், மலம்-மும்மலங்கள், தரங்கு-நீங்காநின்ற, தமர்கள் - அடியார்களுடைய, அந்தரங்கம்-அந்தரங்கத்திலே, பதிந்தவர்-பொருந்தினவருடைய, நாட்டில்-நாட்டிலிராநின்ற, ஒருதையலுக்கு-ஒரு மாதுக்கு,தளர்-தளர்கின்ற, இடை-இடையானது, அந்தரம் - வெளி, கந்தரம் - கழுத்து,கம்பு-சங்கு, கொங்கை-தனம், வரை-மலை. எ-று.

தோற்றமின்மையை யுணர்த்தலால் வெளி இடைக்குவமையாயிற்று. (கக)

காவணங்காவணஞ் சேர்தணிகைப்பரன் கவ்வையிற்பொங், காவணங்காவணஞ் சுண்ணமல்வீணர் கடைத்த

லத்தங், காவணங்காவணஞ் செய்தருள்வோன்வரைக்க
ண்ணிவளங், காவணங்காவணஞ் சேர்பூமகள்கொலென்
கற்றிலமே.

(இ-ள்.) * கா-சோலைகளும், அண்-நெருங்கிய, அங்கு-அவ்விடத்தில், ஆவணம்-கடைவீதிகளும், சேர் - பொருந்திய, தணிகை, தணிகையிலிராநின்ற, பரன்-பரமன், கௌவையில்-துன்பத்தில், பொங்கா-மிகுந்து, அணங்கா-துன்பமாகி, வண்-மிகுந்த, நஞ்சு - விஷத்தை, உண்ணுமல் - உண்ணுமல், வீணர் - வீணர்களுடைய, கடைத்தலை-கடைவாயிலில், தங்காவணம்-தங்காதபடி, கா-காக்கின்ற, வணம்-தன்மையை, செய்தருள்வோன்-செய்தருள்பவர், வரைக்கண்-மலையினிடத்திலிராநின்ற, இவள்-இம்மாது, ஐங்காவணங்கா-தெய்வப்பெண்ணே. அண்அம்-பொருந்திய அழகானது, சேர்-மிக்க, பூமகள்கொல்-திருமகளோ, என்-என்ன, கற்றிலேம் - அறிந்திலோம்.

நஞ்சென்பது நஞ்சுபோல்வதாகிய மாயாவிருத்தி. (௧௨)

வாரணவாரணமார்செய்த்தணிகைவரதகன
வாரணவாரணமாமுகன்சோதரமாலெனுஞ்சே
வாரணவாரணங்குள்ளாரகந்தமகார்துவச
வாரணவாரணஞ்செய்யாதனங்கனென்மார்பத்தையே.

(இ-ள்.) வார்-சலமானது, அண்ண-பொருந்த, வாரணம்-சங்குகள், ஆர்-நிறைந்த, செய்-வயல்கள் சூழ்ந்த, தணிகை-தணிகையிலிராநின்ற, வரத-வரதனே, கனம்-பெருமைபொருந்திய, ஆரண - வேதத்தை யுடையவரோ, வாரணமாமுகன்- யானைமுகத்தையுடையவிநாயகருக்கு, சோதர- சகோதரரோ, மாலெனும் - விஷ்ணுவென்று சொல்லப்பட்ட, சேவார்-ருஷபத்தையுடையவரும், அணங்குள்ளார்-துன்பத்தை யுடையவர்களுடைய, அகம்-மனதில், அணவா

* காவு, எல்லாம் பொருள்களையுஞ் சுமக்காநின்ற, அணங்கு, அழகுள்ள ஆவணஞ்சேர் கடைவீதிகள்பொருந்திய எனினுமமையும்.

ர்தம்-பொருந்ாதவருமாகிய பரமசிவனுடைய, மகார்- பிள்ளையே, துவசவாரண - கோழிக்கொடியையுடையவரே, வா- நீவா, ரணஞ் செய்யாது - புண்செய்யாமல், அனங்கன் - மன்மதன், என்-என்னுடைய, மார்பத்தை-மார்பை. எ-று. (கஙு)

சந்தஞ்சந்தந்தரவோங்குந்தணிகைத்தலனடிக்கஞ்
சந்தஞ்சந்தந்தவமென்பார்க்கருளுந்தகையிடஞ்செல்
சந்தஞ்சந்தந்தவிம்மாலைநங்காய்நின்றனக்குடம்ப
சந்தஞ்சந்தந்தவழ்கைவளைசோர்தறவிர்த்திடுமே.

(இ-ள்.) சந்தம்-அழகை, சந்தம்-சந்தனவிருக்ஷமானது, தர - கொடுக்க, ஓங்கும்-உயர்ந்த, தணிகைத்தலன்-தணிகைமலையில் வாழ்கின்ற சுப்பிரமண்ணியருடைய, அடி-திருவடியாகிய, கஞ்சம்-தாமரையை, தம்-தம்முடைய, தஞ்சம் - அடைக்கலஸ்தானமும், தவம்-தவமும், என்பார்க்கு-என்று துதிக்கின்றவர்களுக்கு, அருளும் - கிருபைசெய்கின்ற, தகை- பெருமையுடையவன், இடம் - இடத்தில்,சந்து-தூது,செல்-சென்ற, அம்சம்-அன்னமானது, தந்த-கொடுத்த, இம்மாலை-இம்மாலையானது, நங்காய்-நாயகியே,நின்- உன்னுடைய, தனம்- தனமாகிய, குடம் - குடமானது, பசந்து - பசந்து, அம் -அழகிய, சந்தம்- நிறமானது, தவழ்-தவழ்கின்ற, கை - கையிலணிந்த, வளை- வளையல், சோர்தல்-கழலுதலை, தவிர்த்திடும் - நீக்கிவிடும். ஏ-ஈற்றசை. எ-று. (கச)

காரணங்காரணங்கோடார்தணிகையர்கன்மனந்தங்
காரணங்காரணல்வேதற்கருளினரன்றியெற்கிங்
காரணங்காரணம்போற்றுவர்காத்தல்செய்யாமைக்கென்
ன, காரணங்காரணவுங்குழல்சோர்வதுங்கண்டிலரோ.

(இ-ள்.) கார்-மேகமானது, அணங்கு-அழகுள்ள,ஆர்-ஆத்திவிருக்ஷத்தில், அண்-நெருங்கும், அம்-அழகிய, கோடு-சிகரமானது, ஆர்- பொருந்திய, தணிகையர்-தணிகைமலையிலிருக்கின்றவர், கன்

மனம்-கன்மனதில், தங்கார்-தங்காதவர், அணங்கு-துன்பமானது, ஆர்-நிறைந்த, அண்ணல்-பெருமையான, வேதற்கு-பிரமனுக்கு, அருளினர்-கிருபைசெய்தவர், அன்றி - அல்லாமல், எற்கு-எனக்கு, இங்கு-இவ்விடத்தில், ஆர்-யார், அணங்கு-தெய்வத்தன்மைபொருந்திய, ஆரணம்-வேதத்தினலே, போற்றுவர்-துதிக்கப்பட்டவர், காத்தல்செய்யாமை-காவாமலிருப்பதற்கு, என்னகாரணம்-என்னகாரணம், கார்-கருமைநிறமானது, அணவும்-பொருந்திய, குழல்-கூந்தலானது, சோர்வதும்- அவிழ்வதையும், கண்டிலர்- காணவில்லை.

ஏ—ஈற்றசை. (கரு)

தம்பந்தம்பந்திக்கவொல்லார்க்குளஞ்சஞ்சலத்தினிற்சி
தம்பந்தம்பந்திறம்பாதருள்வார்வரைச்சார்பணிநி
தம்பந்தம்பந்திளங்கொங்கைமுகமதிதாங்கண்வருத்
தம்பந்தம்பந்திக்கலையிடைதந்தொருதையலர்க்கே.

(இ-ள்.) தம்-தமது, பந்தம்-பாசமானது, பந்திக்க-தம்மைப் பிணிக்க, ஒல்லார்க்கு - இடங்கொடாதவர்க்கு, உளம்-உள்ளமானது, சஞ்சலத்தினில்-சஞ்சலத்தால்வரும், சிதம்பு - பதனழிவினல், அம்-அழகுள்ள, தம்பம்-நிலைமை, திறம்பாது-மாறுபடாமல், அருள்வார்-அருளும் முருகக்கடவுளது, வரைச்சார்- மலைச்சரிவில், ஒருதையலர்க்கு-ஒப்பற்றமாதருக்கு, பணிநிதம்பம்-நிதம்பம்பாம்பு, தம்இளங்கொங்கை-தமதுஇளமையானதனம், பந்து-பந்து, முகம்மதி-முகம் சந்திரன், தாம்-தாவும், கண்-கண்கள், வருத்து-வருத்துகின்ற, அம்பு-அம்பின், அந்தம்-வடிவு, பந்தி-பத்தியாகிய, கலை-மேகலையுள்ள, இடை-இடையானது, தந்து-நூலாகும். எ-று. (கசா)

சரதஞ்சரதமெனுமாரணமுடிசார்குணபஞ்
சரதஞ்சரதமம்போக்குந்தணிகாசலவிகல்வஞ்
சரதஞ்சரதமர்க்கேயருள்வாய்சகிமாரொனுநே
சரதஞ்சரதம்பொலிசுடர்போயதுசார்ந்தருளே.

(இ-ள்.) சரதம்சரதம்-சத்தியம்சத்தியம், எனும்-என்றுசொல்லுகின்ற, ஆரணம்-வேதத்தினுடைய, முடி-அந்தத்தில், சார்-பொருந்திய, குணபஞ்சர-குணபஞ்சரனே, தஞ்சர-அடைக்கலமென்று சொல்லுகின்றவர்களுடைய, தமம் - அஞ்ஞானமாகிய இருளை, போக்கும்- நீக்குகின்ற, தணிகாசல - தணிகாசல, இகல்-வலிபொருந்திய, வஞ்சர்-வஞ்சத்தையுடையவர்களை, அதம்-அதம்செய்கின்ற சர- பாணத்தையுடையவரே, தமர்க்கே-அடியார்களுக்கே, அருள்வாய்-கிருபைசெய்யப்பட்டவரே, சகிமார் - தோழிமார், எனும் - என்றுசொல்லப்பட்ட, நேசர்-அன்பையுடையவர்கள், அது-அதற்கு, அஞ்ச-அஞ்சும்படி, சுடர்-சூரியன், பொலி-விளங்காநின்ற, ரதம்-ரதமானது, போயது-போயிற்று- சார்ந்தருள்- வந்தருள். எ-று.

தஞ்சர என்பதி னீற்றினின்ற அகரம் பன்மைக்கண்வந்த ஆறனுருபு.

(கஎ)

சலஞ்சலமம்புவிநண்ணுதணிமுடிதாங்கினரஞ்
சலஞ்சலமம்மரொழியென்றயற்கருள்வார்சுதன்சஞ்
சலஞ்சல மம்பலொழியத்தணிகையன்சார்ந்தனன்காண்
சலஞ்சல மம்பரஞ்சூழவன் றேரிற்றழங்குவதே.

(இ-ள்.) சலம்-சலனத்தை, அம்புவி-அழகியபூமியானது, நண்ணுது-பொருந்தாமல், சலம் - கங்கையை, அணி-அழகிய, முடி-சிரசில், தாங்கினர்-தாங்கினவர், அஞ்சலஞ்சல்-பயப்படாதேபயப்படாதே, அ-அந்த, மம்மர் - மயக்கத்தை, ஒழியென்று-நீங்கென்று, அயற்கு-பிரமதேவனுக்கு, அருள்வார் - கிருபைசெய்தவருடைய, சுதன்-திருக்குமாரன், சஞ்சலம்-சஞ்சலத்தையும், சலம் - கோபத்தையும், அம்பல்-பழிப்பையும், ஒழிய - நீங்க, தணிகையன்-திருத்தணிகையில் வாழும் சுப்ரமண்யர், சார்ந்தனன் - வந்தனர், காண்-பார், சலஞ்சலம் - சலஞ்சலமென்னும் சங்கானது, அம்பரம் - ஆகாயத்தை சூழ்-அளாவிய, அவன்- அவரது, தேரில்-இரதத்தில், தழங்குவது-சப்திக்கின்றது.

(கஅ)

தாமரைத்தாமரைக் கண்முகமான் மகிழ்தென் தணி
கைத், தாமரைத்தாமரைப் போதினிற் சூர்தடிந் தாரை
த்தந்த, தாமரைத்தாமரை நாகரை நேரந்தித் தாயர்சந்
தந், தாமரைத் தாமரைக் கொங்கையணிவர் தழலெனவே

(இ-ள்.) தா-தாவுகின்ற, மரை மானையும், தாமரை-தாமரைம லரையும்நிகர்த்த, கண்-கண்ணையும்,முகம்-முகத்தையுமுடைய,மா ன்-வள்ளிநாச்சியார்,மகிழ்-மகிழ்கின்ற, தென்தணிகை- தென்தணி கையில்வீற்றிருக்கும்-தாமரை-கடப்பமாலையையுடையவரை,தாம்- தாம்,அரைப்போதினில்-அரைக்கணத்தில், சூர்-சூரபத்மனை, தடிந் தாரை-கொன்றமுருகக்கடவுளை, தந்த-பெற்ற, தாமரை-கீர்த்தியை யுடையவரை, தாம்-அசை .அரை- அரையில், நாகரை - நாகத்தை யுடையபரமசிவனை, நேர்-நிகர்த்த, அந்தி-அந்திகாலத்தில், தாயர்- தாய்மார்கள், சந்தம்-சந்தனத்தை, தாம்-தாங்கள், அரைத்து-அரை த்து, ஆம்-சலத்தில், மரை-தாமரை மொக்கையொத்த, கொங்கை- தனத்தில், தழலென-அக்கினியைப்போல,அணிவர்-அணிவார்கள்.

காதரங்காதரந்தைப்பயில்கண்ணிபங்காளர்பணிக்
காதரங்காதரந்தாஞ்செயும்வேலர்கசடருக்குக்
காதரங்காதரந்தங்குந்தணிகையிற்கந்தர்க்குவா
காதரங்காதரந்தானுறுத்தாமைகடமையன்றே.

(இ-ள்.) காது-ராவிய, அரம்-அரத்தை, காது- கொல்லுகின்ற, அரந்தை-துன்பமானது, பயில் - பொருந்திய, கண்ணி-கண்ணையு டையபார்வதியை, பங்காளர் - அர்த்தபாகத்திலுடையவர், பணி - நாகாபரணத்தையணிந்த, காதர்- காதையுடையவர், அங்கு - அவ் விடத்தில், ஆதரம்-அன்பை, தாம்-தாம், செயும் - செய்கின்ற, வே லர்-வேலையுடையவர், கசடருக்கு-மூடருக்கு,காதர்-காததூரமான வர்,அம்-அழகிய, கா-சோலைகள், தரம்-கூட்டமாக, தங்கும்-தங்கு கின்ற, தணிகையில் - தணிகையினிடத்தி விராகின்ற, கந்தர்க்கு - கந்தசுவாமிக்கு, வாகா-அழகா? தரங்கா-வருந்தாமல், தரம்-தகுதி

யை, தான்-தான்,உறுத்தாமை, அடையச்செய்யாமை,கடமையன்று-கடமையல்ல. எ-று. (உ0)

கனகங்கனகங்குலவுமலைவிற்கரபுரத
கனகங்கனகங்கொளுமவன்சேய்கதிர்கான்மயில்வா
கனகங்கனகங்கவின்மணியார்தணிகைச்சுடரா
கனகங்கனகங்களன்றேவிருப்பதுகாதலியே.

(இ-ள்.) கனம்-மேகமண்டலத்தையும், கம் - ஆகாயத்தையும், குலவும்-அளாவிய, கனகமலை-மேருமலையாகிய, வில்- வில்லை, கரம்-கையிலுடைய, புரதகன - திரிபுரத்தை யெரித்த, கம் - சலத்தை, கன-பெருமை பொருந்திய, கம்- சிரசில், கொளுமவன் - அணிந்த பரமசிவனுடைய, சேய்-பிள்ளை,கதிர்-கிரணத்தை,கால்,கக்குகின்ற, மயில்வாகன - மயில்வாகனத்தையுடைய, கங்கு - வரம்பின்பக்கத்தில், அனகம்-பரிசுத்தம்பொருந்திய, கவின்-அழகிய,மணி-முத்துகள், ஆர்-பொருந்திய, தணிகை - தணிகையிலிராநின்ற, சுடர் - சூரியன்போன்ற, ஆகன்-தேகத்தையுடையவரது, அகம் - மனது, கல்-கல்லு, நகங்களன்றோ-மலைகளல்லவா, இருப்பது - தான்வீற்றிருப்பது, காதலியே-நாயகியே. எ-று. (உக)

கமலங்கமலங்கதிர்க்கும்வயற்றணிகாசலன்வா
கமலங்கமலங்கவினுந்தடத்தினன்காரிருளின்
கமலங்கமலங்கடீர்ப்பான்மதன்வெங்கணைவருவே
கமலங்கமலங்கரவளையாரநிற்காக்குமின்னே.

(இ-ள்.) கம்-சலமும், அலம்-நிறைவாகியகலப்பையும், கமலம்-தாமரையும், கதிர்க்கும்-செழித்திராநின்ற, வயல் - வயல்கள்சூழ்ந்த, தணிகாசலன்- தணிகையில்வாழாநின்றவர், வாகு-அழகுபொருந்திய, அமலம்-பரிசுத்தமாகிய, கமலம்-சலமானது, கெளும்-மிக்க, தடத்தினன்- சரவணப்பொய்கையையுடையவர்,கார்-கறுத்த, இருளின்-இருளினுடைய,கம்மல்-மூடலையும்அங்கமலங்கள்-அங்கம

லங்களையும், தீர்ப்பான்-தீர்க்கின்றமுருகக்கடவுள், மதன்-மன்மதனு டைய-வெம்-வெவ்விய, கணை-பாணமானது, வரு- வருகின்ற, வே கம்-வேகமானது, மலங்க-கெடவும், மல்-பலம்பொருந்திய, அம்- அழகிய, கரம்-கையில், வளை - வளையல்கள், ஆர-பொருந்தவும், நீ ன்-உன்னை, காக்கும்-காப்பார் மின்னே - மின்னலையொத்தயிடை யையுடையாய். எ-று. (உஉ)

வாகனவாகனன்போற்றுந்தணிகைவனியனைய
வாகனவாகனன்றூர்தொழுஞ்சேய்வரவாசிமயம்
வாகனவாகனமாவணையென்றபின்வாழிகண்ட
வாகனவாகனன்காயதென்னேயிந்தமாயமின்னே.

(இ-ள்.) வாகு-அழகிய, அனவாகனன்- அன்னவாகனத்தையு டையபிரமன், போற்றும்-துதிக்கின்ற, தணிகை-தணிகையிலிராநி ன்ற, வன்னி-அக்கினியை, அனைய-நிகர்த்த, ஆகன்- தேகத்தையு டையவர், அவா-மூன்றாசையையும், கனன்றார் - கோபித்தவர்கள், தொழும்-தொழுகின்ற, சேய்-முருகக்கடவுள், வர - வரலும், வா- வருக, சிமயம் - மலையை, வாகு - தோள்கள், அனவா - அன்னவ னே, கனமா - பெருமையாக, அணை - சேர், என்றபின் - என்று சொன்னபின், வாழி - வாழி, கண்டவா - யான் கண்டவாறு, கன வாக-கனவாக, நன்கு - நன்றாக, ஆயது-ஆயிற்று, என்னே-என்ன, இந்தமாயம்-இந்தமாயம், மின்னே - மின்னலைநிகர்த்தவளே. எ-று.

மாதவமாதவன்மாமருகாதணிகேசமன்னு
மாதவமாதவங்கத்தன்மைந்தாவழல்வன்சுரம்விம்
மாதவமாதவன்பின்சென்றனளவண்வாழ்கொடிய
மாதவமாதவழ்பூங்காவுமின்றகமாழ்குறுமே.

(இ-ள்.) மா-பெருமைபொருந்திய, தவம் - தவத்தையுடைய, மாதவன்-திருமாலுடைய, மா-பெருமைபொருந்திய, மருகா- மரு கனே, தணிகேச- திருத்தணிகைநாதனே, மன்னும் - பொருந்திய

ஆதவ-சூரியனே, மாது-பார்வதியை, அ-அந்த, அங்கத்தன்-தேகத்திலுடையபரமசிவனுடைய, மைந்தா - மைந்தனே, அழல்- அக்கினிமயமாகிய, வல்-வலிய, சுரம்-பாலைவனத்தில், விம்மாது - வருந்தாமல், அவமா-வீணாக, தவன்பின்-நாயகன்பின், சென்றனள்-போயினள், அவண்-அவ்விடத்தில், வாழ்-வாழ்கின்ற, கொடிய - கொடுமையையுடைய, மா-மிருகங்கள், தவ- மிகவுள்ளன, மா-வண்டுகள், தவழ்- தவழ்கின்ற, பூம் - பொலிவுபெற்ற, காவும் - சோலைகளும், இன்று-இல்லை, அகம்-மனதானது, மாழ்குறும்-வருந்துவாள். எ-று.

வாமனவாமனற்றந்தைக்குரைதணிகாசலதேவ
வாமனவாமனற்கொண்டான்றனையமணிகொள்வடி.
வாமனவாமனநின்றூர்பரவுமணிமயிலா
வாமனவாமனலமுறக்கூடிமணந்திடற்கே.

(இ-ள்.) வாமன்-அழகையுடையவன், அவா - ஆசையானது, மன்-பொருந்திய, நல்-நல்ல, தந்தைக்கு- பரமசிவனுக்கு, உரை-உபதேசித்த, தணிகாசல - திருத்தணிகையில் வீற்றிருக்கும், தேவா - தேவனே, மனவு - அக்குமணியையும், ஆம் - சலத்தையும், அனல்-மழுவையும், கொண்டான் - தரித்தபரமசிவனுடைய, தனய- புத்திரனே, மணிகொள் - அழகுபொருந்திய, வடிவா - வடிவத்தையுடையவனே, ஆம்-ஆகிய, மனம்- மனமானது, மன்ன - நிலைபெற, நின்றூர்- நின்றவர்கள், பரவும் - துதிக்கின்ற, அணி - அலங்கரித்த, மயிலா - மயில்வாகனத்தையுடையவனே, வா-வா, மனவா - மன்னவா, மன் - மிகவும், நலம் - நன்மையானது, உற - பொருந்த, கூடி-கூடி, மணந்திடற்கு-மணம்புரிவதற்கு. எ-று. (உ௩)

வராகவராகவிரைவணிவர்மலையணித்த
வராகவராகனம்பாவெயில்செற்றவர்மைந்தபகை
வராகவராகநகத்தடிந்தாய்சரநாசியின்வாய்
வராகவராகனக்கொங்கைசந்திருமாதினுக்கே.

(இ-ள்.) வர - சிரேஷ்டமாகிய, ஆகம்-தேகத்தில், அரா-பாம்பை, கவின் -அழகானது, ஆர-பொருந்த, அணிவர்-அணிகின்றவர், மலை-மலையானது, அணி- அழகிய, தவராக-வில்லாகவும், வராகன்-வராகமாகியதிருமால், அம்பா - அம்பாகவும், எயில் - திரிபுரத்தை, செற்றவர்-எரித்தபரமசிவனுடைய, மைந்த-மைந்தனே, பகைவர்-சத்துருக்கள், ஆகவராக - யுத்தகளத்தி லிருக்கின்றவர்களாக, நக-யாவரும் அவர்களை இகழ, தடிந்தாய்-கொன்றவனே, சர-சரமானது, நாசியின்வாய் - நாசியினிடத்தில், வரா-வராது, கவரா- கவர்கின்றிலை, கனம்-புருத்த, கொங்கை-தனங்கள், சந்தம்-சந்தனத்தை, திரு-லட்சுமிபோன்ற, மாதினுக்கு - என் பெண்ணுக்கு. எ-று. (உசு)

சரமென்றது உயிர்ப்பென் றறிக.

தஞ்சந்தஞ்சம்மெனவன்பர்கள்சூழ்தணிகாசலன்வே [ந்
தஞ்சந்தஞ்சங்கையிலாதுரைத்தான்பொற்றனத்துணைப
தஞ்சந்தஞ்சங்கமிடற்றுக்குறத்திதலைவனமர்ந்
தஞ்சந்தஞ்சங்கொணடையாயமுதெனத்தான்வருமே.

(இ-ள்.) தஞ்சந்தஞ்சம்-அடைக்கலம்அடைக்கலம், என - என்று, அன்பர்கள்-அடியார்கள், சூழ்-சூழ்கின்ற, தணிகாசலன்- திருத்தணிகைப்பதி யுடையவன், வேதம் - வேதத்தையும், சந்தம்-சந்தத்தையும், சங்கையிலாது-ஐயமின்றி, உரைப்பான்-சொல்லியருளுவன், பொன்-அழகிய, தனத்துணை - இரண்டு தனங்களும், பந்து-பந்தானது, அஞ்சு-பயப்படுகின்ற, அந்தம்- அழகும், சங்கம்-சங்கு போன்ற, மிடற்று - கண்டத்தையுமுடைய- குறத்தி - வள்ளிநாச்சியாருடைய, தலைவன்-நாயகன், அமர்ந்து - விரும்பி, அம்சம்- அன்னமானது, தஞ்சங்கொள்-விரும்புகின்ற, நடையாய் - நடையையுடையவளே, அமுதென - அமுதைப்போல, தான்-தானே, வரும்-வந்தருளுவன். எ-று. (உஎ)

மாவனமாவனஞ்சேர்பூம்பணைத்தணிகாசலவா
மாவனமாவனஞ்சப்பொருள்சொல்லியமற்புயத்தா
மாவனமாவனசேயிழையாளைவருத்தனல
மாவனமாவனஞ்சாரடற்காமனெய்வன்சரமே.

(இ-ள்.) மாவனம் மாவிருட்சங்களுள்ளவனமும், மா-வண்டுகளும், அனம்-அன்னங்களும், சேர்-பொருந்திய, பூம்-மலரையுடைய, பணை-வயல்களுஞ்சூழ்ந்த, தணிகாசலம்-தணிகைக்கண், வாமா-அழகனே, அன்னமாவன்-அன்னமாகியபிரமன், அஞ்ச-பயப்பட, பொருள்- தாரகப்பொருளை, சொல்லிய- உபதேசித்தருளிய, மல்-வலிமைபொருந்திய, புயம்-புயத்திலணிந்த, தாமா-மாலையுடையாய், வனம்- அழகிய, மா-திருமகள், அன-நிகர்த்த, சேயிழையாளை-பெண்ணை, வருத்தல்- வருத்துதல், நலமா - நன்மையா, அன்ன - அந்த, மா-பெரிய, வல் - வலிய, நஞ்சு - விஷமாம், அடல் ஆர் - வலிபொருந்திய, காமன் - மன்மதன், எய் - எய்கின்ற, வல் - வலிய, சரம்-பாணங்கள். எ-று. (உஅ)

கவலைக்கவலைப்படுத்துந்தவர்துணைக்கண்மணியோ
கவலைக்கவலைப்பரவைபுவிதுதிகந்தநெஞ்ச
கவலைக்கவலைப்பறித்தவர்தாயககாமனெய்புங்
கவலைக்கவலைப்புரைதனத்தாளையென்காட்டினையே.

(இ-ள்.) கவலை-துன்பத்தை, கவலைப்படுத்துந் - துன்பப்படுத்துகின்ற, தவர்- தவசிகளுடைய, துணை-இரண்டாகிய, கண்மணி - கண்மணியாகிய, யோக-விபவத்தையுடையவனே, அலைக்க-அலைக்கும்படி, அலை-அலைகளையுடைய, பரவை-சமுத்திரஞ்சூழ்ந்த, புவி-பூமியிலுள்ளவர்கள், துதி- துதிக்கின்ற, கந்த-கந்தனே, நெஞ்சகம்-நெஞ்சத்திவிராகின்ற, வல்லை- விரைவாய், கவ் - கவ்விய, அல்லை-அஞ்ஞானத்தையும்,பறித்தவர்-ஒழித்தவர்களுக்கு, தாயக-தாயானவனே, காமன்-மன்மதன், எய்-எய்கின்ற, புங்கம்- அம்பாகிய, வலை

க்கு-வலைக்கு, அ-அந்த, வல்லை - சூதாடுகருவியை, புனை-நிகர்த்த, தனத்தானை-தனத்தையுடையவளை, என் - என்ன, காட்டினை-காட்டிவிட்டாய். எ-று. (உக)

காதலைக்காதலைநீத்தார்தொழுந்தணிகைப்பரன்மங்
காதலைக்காதலைநாகர்மைந்தன்வரைக்காமனியங்
காதலைக்காதலைப்பாரினட்பாக்குந்தன்காதலனுக்
காதலைக்காதலையந்திரச்சொல்லெனைக்காத்தல்செய்யே.

(இ-ள்.) காது-வருத்துகின்ற, அல்லை - அஞ்ஞானவிருளையும், காதலை-ஆசையும், நீத்தார்-துறந்தார், தொழும்-தொழுகின்ற, தணிகை-தணிகையிலிராநின்ற, பரன்-பரமன், மங்கா-கெடாமல், தலைதலையிலும், காது-காதிலும், அலை-அசைகின்ற, நாகர்-நாகாபரணத்தையணிந்தபரமசிவனுடைய, மைந்தன்-பிள்ளையாகியமுருகக்கடவுளது, வரை-மலையில், காமன் மன்மதன், இயங்காது-சஞ்சரிக்காமலும், அலைக்காது-அலைச்சல்படுத்தாமலும், அலை-சமுத்திரஞ்சூழ்ந்த பாரில் - பூமியில், நட்பாக்கும் - நட்பாக்கிய, தன் - அவருடைய, காதலனுக்காதல்-தோழனுக்காவது, ஐக்காதல்-நாயகனுக்காவது, ஐயந்திர-சந்தேகநீங்க, சொல்-சொல்லி, எனை-என்னை, காத்தல்செய்-இரட்சி. எ-று. (கூ0)

தந்தந்தந் தந்தன மாவியென் பார்தஞ்சஞ் சூர்ச்செ
ந்நெனந்,தந்தந்தந் தந்தனி யான்றுணை யாகமந் தண்கலை
வே, தந்தந்தந் தந்தவ றில்லா தருள்சண் முகமலர்ப்பா,
தந்தந்தந் தந்தளர் நுண்ணிடை யாட்குநின் றூரவியே.

(இ-ள்) தந்தந்-கொடுத்தோம், தம்தம்-தங்கள்தங்களுடைய தனம்-தனத்தையும், ஆவி-உயிரையும், என்பார்-என்றுதுதிக்கின்ற வர்களுக்கு, தஞ்சம் - பற்றுக்கோடானவனே, சூர்-சூரபத்மனுகிய செந்நெல்-செந்நெல்லை, நந்து-அரிக்கின்ற, அந்து-அந்துபோன்ற

னே, அம்-அழகிய, தந்தந்தனியான் - ஒற்றைத்தந்தத்தை யுடைய விநாயகருக்கு, துணை-சோதரனே, ஆகமம்-ஆகமங்களையும், தண்-தண்மையாகிய,கலை-கலைகளையுமுடைய, வேதம்- வேதத்தையும், தந்து-கொடுத்து, அந்தம்-இறுதியில், தவறில்லாது-தவறுமல், அருள்-கிருபைசெய்கின்ற, சண்முக-சண்முகனே, மலர்ப்பாதம்-மலர்ப்பாதத்தையும், தந்து - நூலினுடைய, அந்தம் - அழகானது, தளர் - தளர்கின்ற, நுண்-நுண்ணிய, இடையாட்கு-இடையை யுடையவளுக்கு,நின்-உன்னுடைய, தார்-மாலையையும், அளி-கொடுத்தருள்.

ஏகாரம்-ஈற்றசை. அந்து என்பது நெல்லினை யரிக்கும் ஒருவகைச்செந்து. (நக)

திருத்தணிகை

# இரட்டைச்சொல் யமகமாலை

முற்றுப்பெற்றது.



ப. சிவபாத முதலியார்.